நடத்துகிறவர்களாலேயே சமாளிக்க முடியாமலிருக்கும்போது கூட்டுறவு இயக்கத்தினுல் இதைச் சமாளிக்க முடியாது என்பது சர்க்காருடைய கருத்து.

SRI V. K. KOTHANDARAMAN : இந்த தோல் ஷாப்புகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் ஈடுபட்டு வேலை செய்கிறுர்கள். தோல் ஷாப்புகள் மீண்டும் நடைபெற வேண்டுமென்பதற்காக, அவர்களுடைய லட்சக் கணக்கான ரூபாய் பெறு மானமுள்ள சொத்துக்களை அடமானம் காட்டியும் அவர்களுக்கு கடன் வழங்குவதற்கு சர்க்கார் முன்வரவில்லை. ஆகவே, உடனடியாக இது போன்ற பண உதவியையாவது சர்க்கார் செய்ய முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இன்டஸ்ட்ரியல் அண்டர்டேகிங்சுக்கு எல்லாம் ஸ்டேட் எய்ட்டு இன்டஸ்ட்ரீஸ் ஆக்டின்படி ஓரளவு உதவி கொடுக்கப்படுகிறது. எந்த அளவு அவர்களுக்கு கொடுக்க முடியுமோ அதைப்பார்த்து கொடுத்துக்கொண்டிருக்கிறுர்கள். அதற்கு மேல் அதிகமாக பண உதவி செய்வதற்கு வழி இல்லை.

*Committee on Co-operation.*

*292 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the major recommendations of the Committee on co-operation appointed under the Chairmanship of Sri T. M. Narayanaswami Pillai in 1955 which have so far been implemented and the details thereof; and

(*b*) the recommendations yet to be implemented and the reasons for the delay in implementing them?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The report contains a summary of recommendations. The recommendations implemented so far are :—

41 to 58; 69 to 79; 82 to 99; 101 to 123; 124 to 132; 177 to 195; 198; 216 to 226; 227, 228, 235, 248 to 253, 254 to 259; 261; 263; 272 to 274; 311, 330; 332 to 334.

(*b*) The examination of other recommendations is not yet finished.

SRI V. K. KOTHANDARAMAN : மார்க்கெட்டிங் சொசைட்டிகளிலே எந்த எந்த உணவுப் பொருள்கள் பேரிலே பணம் கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : தனியாக கேள்வி வேண்டும். சுமார் 300 சிபார்சுகள் இந்தக் கமிட்டி செய்திருக்கிறது. அவைகளில் ஒவ்வொன்றுக்கும் ஒரே சமயத்தில் பதில் கொடுக்க முடியாது. தனியாக கேள்வி போட்டால் பதில் கொடுக்கமுடியும்.

SRI M. KALYANASUNDARAM : அ௧.மச்சர் அவர்கள், 300-க்கு மேற்பட்ட சிபார்சுகள் இருப்பதை, நம்பரைச் சேர்த்துக்கொண்டு பதில் சொல்வதனுல், அவைகளைப் புரிந்துகொள்வது கஷ்டமாக இருக்கிறது. சிபார்சுகள் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்பதற்கு ஒரு அறிக்கை சபைமுன் வைக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : எல்லா சிபார்சுகளையும் பரிசீலனை செய்த பிறகு வைக்கலாம் என்பது சர்க்காருடைய யோசனை. இப்பொழுது "அட்மினிஸ்ட்ரேட்டிவ்" ஆக இருக்கக்கூடிய சிபார்சுகளையெல்லாம் ஓரளவு அங்கீகாரம் செய்து விட்டோம். சட்டத்தைத் திருத்த

[18th September 1958

வேண்டிய சிபார்சுகள் இருக்கின்றன. இன்னும் அடிப்படையிலேயே கூட்டுறவு முறை பற்றிய சிபார்சுகள் எல்லாம் இருக்கின்றன. அவற்றைப் பரிசீலனை செய்து சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிடலாம் என்ற யோசனை இருக்கின்றது.

## *Agricultural farms.*

***293 *Q.*—Sri A. VEDARATHNAM :** கனம் கைத் தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இம்மாகாணத்தில் கூட்டுறவுப் பண்ணை சாகுபடி எங்கெங்கு வெற்றிகரமாக நடக்கிறது ?

(ஆ) எத்தனை ஏக்கர் நிலங்கள் கூட்டுறவுப் பண்ணை சாகுபடியின் கீழ் கொண்டு வரப்பட்டிருக்கின்றன ?

(இ) இதனால் என்ன அனுகூலம் ?

(ஈ) ஓர் மாதிரி கூட்டுறவுப் பண்ணையை (model co-operative farm) நடத்த அரசாங்கத்திற்கு ஏதேனும் உத்தேசம் உண்டா ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) Co-operative Land Colonisation Societies are working successfully in the following places :—

(1) Kangayampatti, Tanjore District.

(2) Gettisamundram, Coimbatore District.

(3) Alatti Vachinampalayam, Coimbatore District.

(4) Sivasankarapuram, Salem District.

(5) Thengaaumurahad. The Nilgiris District.

(*b*) 6,706·75 acres.

(*c*) Co-operative farming socieities of the tenant farming type known as Land Colonisation Societies help to settle landless labourers in Government waste lands. Joint Farming Societies help small owners to pool their lands for better cultivation. For both these types, Government give liberal financial assistance besides free services of staff and technical advice and guidance. So far as the State is concerned co-operative farming helps to increase food production.

(*d*) No Sir.

**Sri A. VEDARATHNAM :** மாதிரி கூட்டுறவுப் பண்ணை நடத்த முடியாது போனாலும், கூட்டுறவுப் பண்ணைகள் நன்கு நடக்கிறதாக அமைச்சர் அவர்கள் குறிப்பிட்ட அந்த இடங்களுக்கு நன்கு நடக்காத பண்ணைகள் நடத்துபவர்களை அழைத்துச் சென்று அவைகளைக் காட்டி அம்மாதிரி நன்கு நடக்காத பண்ணைகளை நன்கு நடக்க வைக்க அரசாங்கம் முன் வருமா ? நன்கு நடக்கிற பண்ணைகளில் ஏக்கர் ஒன்றுக்கு வரும் சராசரி வருமானம் என்னவென்ற விஷயத்தை தயவு செய்து அறிவிக்க முடியுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** அங்கத்தினர் அவர்கள் ஏதாவது ஒரு சொஸைட்டியைக் குறித்து அதில் ஏக்கருக்கு என்ன வருமானம் வந்து இருக்கிறது என்று கேட்டால் தனியாக பதில் கொடுக்க முடியும். மொத்தத்தில் வருமானம் நன்கு வந்திருக்கிறது. அவைகள் நன்கு வேலை செய்து கொண்டிருக்கின்றன என்ற கணக்குத்தான் என்னிடம் இப்பொழுது இருக்கிறது.